இவையெல்லாம்பிடித்து பொழுமிட்டிறக்கி சாப்பிடும் போது அரிக்காலரூபா யிடை சந்தன அக்கர்விட்டு சாப்பிடவும் இப்படி ஆறுவேளை சாப்பிடவும

தீரும்வியாதி

விரைவீக்கம் விரைநோய ரப்புபிழுப்பு இவை நீங்கும்

---

இதுவும் விரைவாதத்திற்கு மசால்வடை

கெச்சக்காய்ப்பருப்பு ௬-எடுத்து அம்மியில்வைத்து கோழிமுட்டை வெள்ளை ஆயபிலிவிட்டு அரைத்து வடைபோலதட்டி அந்த ஒருவடைக்கு போதுமான சித்தாமணக்கெண்ணை சட்டியில் ஊற்றி இந்த வடைபோட்டு வேகவைத்து எடுத்து இந்த வடையை தின்று அந்த எண்ணெயில ஒரு கரண்டி சாப்பிடவும் ௫-௬-தருதிபேதியாகும் இப்படி ௩-நாள் சாப்பிட

தீரும்வியாதி

விரைவாதம் நீங்கும் சில வாய்வுகள் கை கால்களில் குத்தல் குடைச்சல இவைநீங்கும் இச்சாபத்தியமிருக்கவும்.

வயற்றுநோய்க்கும் வயற்றுகிருமிகட்கும்

கியாழம்

பிரண்டை கவ பலம் வேப்பம்பிர்க்கு கவ-பலம் புரசைவித்து கவ-பலம

இவைகளைக்கொண்டுவந்து இடித்து பொடியிட்டு நன்றாய் காய்ந்தபிறகு பசும்பால் வீசம்படி சீனாக்கற்கண்டு பொடி நாலுசிட்டிகை சித்தாமணக்கெண்ணை பத்துதுளிவிட்டு யிறக்கி சாப்பிடவும் ௪-௫-விசை பேதியாவதுடன் வயற்றுப்பூச்சிகள் வெளிப்படும் வயற்றுநோய்தீரும்.

## அண்டவாதசாந்திப்பொடி.

கருவிளையல் பொடிசெய்து வஸ்திரகாயஞ்செய்து மிளகுபொடி க-பலம் சேர்த்து அதிற்பாதியிடை பெருங்காயங்கூட்டி யிரண்டை கியாழத்தினால் உ-ஜாமம் அரைத்து பில்லைதட்டி நிழலில் உலர்த்தி மறுநாளெடுத்து பொடித்து தேன்விட்டு பிசைந்து கெச்சக்காய்பிரமாணம உருண்டைசெய்து கூ-டு-எ-நாள காலையில சாப்பிடவும.

## உட்காச்சல் பிரமியம் மேகத்திற்கு சாந்தி

பேயன் வாழைப்பழம்-சய

சர்க்கரை ய பலம் சீரகம் டு பலம்
உலர்ந்த இஞ்சித்தூள் டு,, பரங்கிசக்கைதூள் உற,
தேன் இரண்டரைபலம்.

இவையெல்லாம் ஒன்ருகப்பிசைந்து வெய்பலில் க-நாள் வைத்து மறுநாள் முன்னைக்காயளவு சாப்பிடவும் இப்படி காலே மாலே சய-நாள் தினாவும்.

## தீரும்வியாதி.

மேகம் அணுகாது உட்காச்சல் பிவைநீங்கும் வாய்வானபண்டங்கள் நீக்கி போசனம் செய்யவும் ஸ்திரீபோகம் லாகிரிவஸ்துகூடாது.

---

## ரெத்தபித்தநீரக் குடிநீர்

ஆடாதோடையிலே க-பிடி

பச்சைதிராட்சப்பழம் க-பிடி

இரண்டும் கசக்கிப்போட்டு கியாழமிட்டு இரக்கும்போது திப்பிலித்தூள் துட்டிடைபோட்டு சாப்பிடவும் சாந்தியாகும்.

## இருமல் உப்பிசந்திரப்பொடி.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | வ | பலம் | திப்பிலி | வ | பலம் |
| மிளகு | வ | பலம் | கடுகு | வ | பலம் |
| நெல்லிக்காய் | வ | பலம் | தான்றிக்காய் | வ | பலம் |
| கடுக்காய் | வ | பலம் | இந்துப்பு | வ | பலம |
| சிறுதேக்கு | வ | பலம் | கண்டந்திப்பிலி | வ | பலம் |
| சடாமாஞ்சி | வ | பலம் | | | |

இவைகளை கொண்டுவந்திடித்து சூரணித்து வஸ்திர காயஞ்செய்து வைத்துக்கொண்டு இஞ்சி சுரசத்திலா வது தேனிலாவது திருகடிப்பிரமாணம் போட்டு கு ழைத்து சாப்பிடவும் இப்படி அந்திசந்திரெண்டு வேளையாக கரு-நாள சாப்பிடவும்,

தீரும்வியாதி,

குத்திருத்திக்கொண்டிறைக்கும் யிருமல் வயா உப்பிஷம் இவை நீங்கும் பத்தியம்,

கரி சூப்பு கிளுவை உளுவை குரவை கத்திரி முருங்கை அவரை இதுகளின் பிஞ்சு நெய் கூட்டி சாப்பிடவும் அதிக தீபனமும் உண்டாகும்.

---

## யீளையிருமல் சுவாசத்திற்கு கிருதம்,

தூதுவேளைப்பழரசம் துட்டிடை
ஆவின்நெய் துட்டிடை
நற்சீரகம் விராகனிடை-க கருஞ்சீரகம் விராகனிடை-க
சுக்கு விராகனிடை க திப்பிலி விராகனிடை க
மிளகு விராகனிடை க

இவைகளையெல்லாம் நன்றாய்ப்பொடித்து வஸ்திரகா யஞ்செய்து மேற்படி பால நெய் பழரசமிதுகளுட ன் குழைத்து சாப்பிட நீங்கும்,

பிள்ளைகட்குவரும் சுரத்திற்குங் குளிருக்கும்
மருந்து,

மூசியாமனதகலமேலவைற வெண்ணீரவிட்டரைத்து கொஞ்சம் சக்கரையிட்டு பிசைந்து கொடுக்கநீங்கும்,

அஜீரணத்திறகு குழமபு,

வெளளைககாக்கணம்வேர் மிளகு இரண்டும் வெ ன்னீரவிட்டரைத்து தேனில் மத்தித்து உண்ண அஜீ ரணம வெகு சீககிரம நீஙகும்.

---

மொலாம்.

லிங்கம் ை பலம் பூரம் வ பலம் முதார்சிங்கு வ பலம்

இந்த மூன்றுதினுசை மைபோலரைத்து படிகாரம் காலரிககாபலம் கட்டநெருப்பில்வைத்து பொங்கின பிறகு சூரணத்துடன்வைத்து நாலனையு மைபோல ரைத்து டகம்வெண்ணை ஒருபலம்போட்டு நெகிழ அரைத்து ஒருபரணியில் வழித்துககொள்ளவும் கடு க்கா காசிசடடி தினுசு ஒன்றுக்கு காலபலம் கொண் டுவந்து இடித்து ஒரு பாத்திரத்தில் ஒருபடி தண ணீர்விட்டு பிறகு துளை கொட்டி. காச்சி அரைபடிசல ந்துக்குயிரக்கி இந்தமுலாமைபோடவும் ஆராதரணம் ஆறும,

---

தந்தவியாதிக்குப்பொடி

எருக்கம்பழுப்பு ரூ௰-கொண்டுவந்து அம்மியை சு த்திசெய்துவிட்டு பழுப்பை அம்மியில்வைத்து கட்டி யாய் நெகிழ அரைத்து உண்டைசெய்து வெள்ளை மல்துண்டால இரண்டு மூன்று புரைசுத்தி சாணியை கட்டியாகபிசைந்து துணிதெரியாமல்பூசி வெய்யலில் காயவைக்கவும் காய்ந்தபிறகு காடைபுடம்போட்டு

தணிந்தபிறகு தணியைபிரித்தெறிந்துவிட்டு ஒருநா த்திரத்திலெ எருக்கம்பாலைக்கொண்டுவந்து அம்மியில் சூரணத்தைவைத்து பாலைவிட்டு நெகிழவரைத்து பிலலைதட்டி வெய்யலில் காயவைத்து பானைவோட் டை இரண்டு பில்லை நரிக்கி ஒரு பில்லையின்பேரில மருந்தைவைத்து மற்றொருபில்லை மேல்மூடி மூன்று வரட்டியில் புடமபோடவும் போட்ட சூரணத்தை ஒரு டப்பியிலவைக்கவும்,

முடக்கத்தான்வேர் ரு பலம் கடுக்காத்தோல் ரு கரிவேலம்பட்டை ரு பலம் மயில்துத்தம் உ ,, இதுகளை கட்டியாய் மைபோலரைத்து லேசாக பில் லைபோல்தட்டி வெய்யலில காயவைத்து ஒரு வரட்டி யில் சுட்டு எருக்கம்பழுப்பு சூரணத்துடன் சேர்த்து காலைமாலை பலதேய்க்கவும் தீரும்வியாதி.

பலநோய் பல்லில் ரெத்தம்வருதல் பல்லில் புழு விழுதல் பல் சொத்தைவிழாமை தந்தவியாதிகளு க்கு சஞ்சீவியென்றறியவும்.

மகோதராசாந்திக்கு சாறு.

பேய்பீர்க்கின்காய பச்சையாய் கொண்டுவந்திடி த்துப் பிழிந்தசாறு உழக்கு பெருங்காயம் கடுகு உல ர்ந்த இஞ்சிதூள் இவை வகைக்கு க-களஞ்சிபோட் டு மூன்றுநாளுண்ண சவுக்கியத்தைக் கொடுக்கும் வியாதி பலக்காது.

கிரந்தி சூலை புண் வயற்றுவலி வாய்வு இதுகட்கு பெரும்பாடுதீர நெய்,

நாவலபட்டை ரு பலம் ஒதியம்பட்டை ரு பலம் இரண்டுங்கொண்டிடித்து தக்கன நீர்விட்டு இயாழ்பி

ட்டு அதிமதுரத்திற்கு பசும்பால்விட்டரைத்து அதி ற்கரைத்து காய்ச்சி வடிகட்டி காலைமாலை யுண்டுவர ஸ்திரீகளின பெரும்பாடு மிக்கசாந்தியாம்.

## நீர்கழிச்சலுக்கு கட்டுவாறு.

வெள்ளை குண்டுமணிபருப்பு உ-பலம்
புளியங்கொட்டைதோல் உ-பலம்

இவை ரெண்டையுங்கொண்டுவந்து பொடியாக மைம் போலரைத்தெடுத்து ஒருகளஞ்சி எருமைவெண்ணை யில் கெச்சக்காய்பிரமாணம் மேற்படி மருந்தைப் போட்டு பிசைந்து சாப்பிட நீரொழுக்கு சாந்தியா கும்.

## காதிறைச்சலுக்கு தைலம்.

| | |
|---|---|
| எருக்கன்யிலைசார் | ரெண்டரைபலம் |
| " என்ணெண்ணை | ரெண்டரைபலம் |

ஒன்றுபடித்தி அடுப்பிலிட்டு

| | | | |
|---|---|---|---|
| உள்ளி ரெண்டரை விராக | | கோஷ்டம் ரெண்டரைவி | |
| வசம்பு | ,, | திப்பிலி | ,, |
| சுக்கு | ,, | இந்துப்பு | ,, |
| கோரைக்கிழங்கு | ,, | | |

இவையெல்லா மிடித்துபபோட்டு காய்ச்சி வைத்துக் கொண்டு உ-துளிவிட்டால் காதிரைச்சல் தீரும்.

## பெரும்பாட்டுக்கு

முக்காவேளைவேரின் பட்டையைக் கொண்டுவ ந்து அறைத்து மூன்று கெச்சக்காய் பிரமாணமெடுத் து பச்சரிசி கழுநீரில் கலக்கி சாப்பிடவும் இப்படி க-டு-நாள் சாப்பிடவும்.

ஓடு குன்மத்திற்கு பொடி.

குப்பைமேனி சமூலம் ரு-பலம்
செருப்படைகையான் ரு-பலம்
தகரை ரு-பலம்

இவை மூன்றும் நிழலிலுலர்த்தி பொடித்துவைத்துக் கொண்டு திருகடிப்பிரமாணம் தேனில குழைத்துத் தினனவும் இப்படி அந்திசந்தி உ௰-நாள் ௪௰ - நாள் சாப்பிடவும் வாய்வுபண்டங்களாகாதென்றறிக,

---

நீர்கடுப்பிற்குமருந்து,

கோரைக்கிழங்கு ஆவாரம்விரை
தேத்தான்வித்து புளியங்கொட்டைதோல்

இவையெல்லா இளநாவிட்டரைத்து ராத்திரியில் பனியில்வைத்து காலையிலெடுத்து சாப்பிடவும இப்படி ௩-நாள்கொள்ளதீரும்.

பிள்ளைபெற்றவர்களுக்கு வயிற்றில்தங்கிய
அழுக்குநீங்கமருந்து.

சுக்கு உ பலம் வெள்ளைவெங்காயம் உ பலம்
மிளகு உ பலம் சித்திரமூலை உ பலம்

இவைகளை யெல்லாமிடித்து நாலிலொன்றாய் கியாழமிட்டிறக்கி சாப்பிடவும் இப்படி ௩-நாள் கொள்ளவும்,

---

கரப்பான் ரிணங்களுக்கு எண்ணெய்

செங்கத்தாரிப்பட்டை ஒருபிடி
சிறுகுறிஞ்சான்வேர் ஒருபிடி
சிறுசின்னியிலை ஒருபிடி

மிளகு ௨ பலம் விளக்கெண்ணெ ௮ பலம் எண்ணெவிட்டே இலைகளையரைத்து எண்ணெயிலே கரைத்து அடுப்பேற்றி மெழுகுபதமாய்க்காய்ச்சிசிறு கரண்டியிதம் ௩-௬-நாள கொடுக்கவும் கடும்பத்தியம் தாய் காக்கவும்,

## வாய்வு கிராணிக்கு நத்தைச்சுண்ணே.

நத்தைச்சதை ௨-பலம் சுக்கு மிளகு திப்பிலி ஓமம் சீரகம் காயம் கடுகுருணி இந்துப்பு இவை வகைக்கு ௨0-விராகனிடை முருங்கை இருப்பைப் பொழுதுதிலரைத்து கஉ-பலம் எண்ணெயில் கரைத்து மேற்படி நத்தைசதையைபோட்டு மெழுகுபத மாய்க் காய்ச்சி யிரக்கி சிறுகரண்டிவிதம் ௯-டு - நாள் சாப்பிடவும்.

## கரப்பான் வியாதிக்கும் சிரத்திற்கும் உள்ளுக்கும் மேலுக்கும் எண்ணெ

கருநொச்சியிலே பிடி க சாரணை பிடி க
சிறுகுறிஞ்சான் பிடி க சிவகரந்தையிலே ,, க
சின்னியிலே பிடி க

விளக்கெண்ணெ ௰-பலத்தில் இவை யாவும் அரைத்து கரைத்து,

வசம்பு ௨ரைபலம் பூண்டு அரைபலம்
கடுகுருணி அரைபலம்

பொடித்துப்போட்டு காய்ச்சி யிரக்கும்போது ரசகற்பூரம் ௨-விராகனிடை எண்ணெவிட்டரைத்து கலக்கி யிரக்கவும் உள்ளுக்கு கரண்டிவிதம் கொடுத்து மேலுக்கும் பூசிவர எவ்வித சிரங்கும் ஆறிவிடும்.

## சகலரோகத்திறகும் எண்ணெ

பெருமிலைசார் ௨ படி வல்லாரியிலைசார் அரைபடி
வெங்காயச்சார் ௨ படி கததாழைமடல்சார் அரைபடி
ஆகாஷத்தாமரைசார் அரைபடி

வகைக்கு அரைபடிசார்பிழிந்து ஒரு பாத்திரத்தில் வைத்துக்கொள்ளவும் ஒருயேனத்தை அடுப்பிலவைதது இந்தசாருகளையூத்தி அரை வீசை விளககெண்ணெயை சாறறுடன ஊத்தி கிளறிக்கொண்டேயிருக்கவும் எண்ணெ பதமாயவரும்பொழுது யிரக்கவும் ௭ நாளுக்கு ௨-பலம் எண்ணெ சாப்பிடவும் பத்தியம் இச்சாபததியம சகலவியாதியும்போகும.

---

## பேதிக்கியெண்ணெ

சுக்கு க பலம சிததிரத்தை க பலம
பாககு ௫ பலம மிளகு க பலம்
கடுகுரோகிணி அரைபலம் கடுக்கா ௨ பலம்
யிரப்பு அரைபலம்

இவையெல்லாம் தூள்செய்து கியாழஞ்செய்து வடிகட்டி சித்தாமணக்கெண்ணெ க பலம்விட்டு சாப்பிடவும் யிச்சாபத்தியம்.

தீரும்வியாதி.

சுரத்துக்கு பித்தசாந்தி யிடுப்பு வாய்வுநீங்கும்,

## குளிர்ச்சியெண்ணெ.

இளநீர் ௨ எலிமிச்சம்பழம் ௰
வாலமிளகு ௮ பலம் ஏலரிசி ௮ பலம
பனங்கற்கண்டு ௮ பலம் விளக்கெண்ணெ அரைவீ
மண்பாத்திரத்தை அடுப்பில்வைத்து இளநீர்சாற்றை
விட்டு எலிமிச்சம்பழ ரசத்தை விட்டு வால்மிள

கு ஏலரிசி ரெண்டையும் பொடித்துப்போட்டு பனங் கற்கண்டை கொட்டி எண்ணெயைபூத்தி கிளரி பதத் தில யிரக்கவும் க-பலம் எண்ணெசாப்பிடவும் இச்சா பத்தியம் ரிரும்வியாதி,

நீர்சுருக்குரத்தக்கடுப்பு பித்தசாங்கி உயிர்நிலை புண்பெரும்போக்கு வயத்துவலி இவைகள் தீரும்,

ராட்சதசூரணம்,

இந்துப்பு பொட்டிலுப்பு கல்லுப்பு கரியுப்பு வெடியுப்பு வகைக்கு விராகனிடை ௨ ௰

வாய்விளங்கம் க பலம் கருஞ்சீரகம் அரைபலம் ஓமம் அரைபலம்

இவையெல்லாமிடித்து சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து இருத்து அவ்விடைச் சமயிடை இண்டமபட்டை சூரணம்சோதது வைத்துக்கொண்டு காலையில திருகடி சூரணமெடுத்து தேன் நெய் இதுகளை ரெண்டுகலந்து குழைத்து சாப்பிடவும் பத்தியம செய்ங் ாைத்தண்டு துவரை நெத்திலிசுரா இவைகளாகும, வாதசநிருல்வாத குத்தல குடைச்சல்நீர சூரணம

இலைக்கள்ளி வேர் பட்டையை உலர்த்திபிடித்து சூரணம்செய்து வைத்துக்கொண்டு பிரதிதினம கா லையில் துட்டிடை பொடியெடுத்து தேன்விட்டு குழைத்து சாப்பிட வாய்வு யாவும் தீருவதுடன் எலி முதலான சில விஷங்கள்தீரும் இச்சாபத்தியம்,

பெரும்விக்கலுக்குமருந்து,

எட்டுவிராகனிடை திப்பிலி
பத்துவிராகனிடை சீரகம்

இரண்டும் சூரணித்து தேனில்குழைத்து தின்ன உடனேமாறும்,

## சொறிசிரங்கிற்கு சூரணமும் எண்ணெயும்.

ஜாதிலிங்கம் ௬ பலம் வெள்ளருகு ௬ பலம்
இவ்விரண்டையும் சூரணித்து க-பலம் சூரணத்திற்கு ரு-
பலம் எண்ணெய் கலந்து காய்ச்சி கரண்டியளவு சாப்பி
ட்டுவர சிரங்கு சொறி தீரும்

---

## ஆரையாம்புத்திர எண்ணெய்.

கொடிவேலிவேர் விராகனிடை-உ௰
வித்து விராகனிடை உ௰ வசம்பு விராகனிடை-உ௰
காயம் ,, இரண்டரை உள்ளி ,, ரெண்டரை
ஆருசு ,, இரண்டரை
இவைகளை சூரணித்து ரு-பலம் எண்ணெயில் கலந்து
காய்ச்சி தொட்டியாக உண்டுவரில் ஆரையாப்பு
சூலை கிரந்தி தீரும்

---

## பெருமூத்திர பசுமோர்.

தேற்றான்விரை ௨ பலம் ஆவாரைவிரை ௨ பலம்
விளாம்பிசின் ௨ பலம் கடுக்காய் ௨ பலம்
இந்த நான்கையும் பொடித்து பசுமோரிற் கலந்து
சாப்பிட மூத்திரப்பெருக்கு நிற்கும் இப்படி ௬-நாள்
கொள்ளவும்.

---

## பல்வலிதீரக் கியாழம்

மருக்காரை ரு பலம் சுக்கு ரு பலம்
மருதம்பட்டை ரு பலம் வெள்வேலம்பட்டை ரு ,,
எருக்கின்சமூலம் ரு ,, ஆவாரம்பட்டை ரு ,,
இவையெல்லாமிடித்து கியாழமிட்டு குறுகக்காய்ச்சி
யிறக்கி வாய் பொறுக்கும் சூட்டுப்பதத்தில் கொப்பளி
க்கவும் ரு-௬-வேளை கொப்பளிக்கவும் பல்வலிதீரும்.

### பித்தம் சய-தீர தலைமுழுகும் தைலம்.

நல்லெண்ணெய் அரைபடி நெல்லிச்சாறு உழக்கு பசும்பால் உழக்கு முசுமுசுக்கைச்சாறு உழக் சீந்திலசாறு உழக்கு பொன்னாங்கணிச்சாறு உழ இவையெல்லாமசேர்த்து எண்ணெயிறகலந்து மூத்த ககாசு அதிமதுரம் ஏலம் சடாமாஞ்சி செண்பகம இராம்பு சந்தனத்தூள் வகைக்கி விராகனிடை-உ பொடித்தாப்போட்டு காய்ச்சி தலைமுழுகிவர பித்தம் நாற்பதுந்தீரும்.

---

### மேற்படி பித்ததிற்கு சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மதுரம் | உ | பலம் | கோஷடம் | உ | பலம் |
| ஏலம் | உ | பலம | சடாமாஞ்சில் | உ | பலம் |
| சநதணம் | உ | பலம் | இராம்பு | உ | பலம |
| தாளிசப்பத் | உ | பலம் | சீரகம் | உ | பலம் |
| சுக்கு | உ | பலம் | திப்பிலி | உ | பலம் |
| கோரைககிழ | உ | பலம் | நெல்லிமுள்ளி | உ | ப.ம |

இவைகளையெல்லாமிடித்து வஸ்திரகாயஞ்செய்து அவிவிடைககு சமன் வெண்சக்கரைக்கலந்து சீசாவில வைத்துக்கொண்டு காலை மாலை திருகடிப்பிரமாணம் ச௰-நாள்கொள்ளவும்.

---

### மூலநோய்யாவுந்தீரசூரணம்

வாழைக்குருத்தின் உலர்ந்த-உ௰ பலம்
காட்டுக்கருணை உ௰ பலம் கரிக்கருணை உ௰ பலம்
புளிக்கருணை உ௰ பலம் காராக்கருணை உ௰ பலம்
சித்துரைமூலம்உ௰ பலம் மருட்கிழங்கு உ௰ பலம்
புளியாரை உ௰ பலம்

இவையெல்லாம் சூரணித்து எருமைப்பாலில் பிட்டவி- த்தெடுத்து அவ்விடைபிற்பாதி சக்கரைகலந்து வைத்துக்கொண்டு சஎ-நாள் காலை மாலையும் திருக டிப்பிரமாணம சாப்பிடவும்,

---

கண்டத்திற்குமேற்பட்டவியாதிக்கெல்லாம்

சூரணம்,

| | | | |
|---|---|---|---|
| கண்டங்கத்திரி | க பலம் | பெருமருந்து | க பலம் |
| சுக்கு | க பலம் | செங்கத்தாரி | க பலம் |
| இருசீரகம் | க பலம் | திருகடுகு | க பலம் |
| நற்சங்கம் | க பலம் | அரத்தை | க பலம் |
| விளங்கம் | க பலம | பரிஙகி | க பலம |

இவைகளையெல்லாம சூரணித்து அந்திசந்தி திருகடி கொண்டு இச்சாபத்தியமிருக்கவும்

வாதம அய-க்கும் சூரணம்

| | | |
|---|---|---|
| சித்திரைமூலம | மாவிலிங்கம | சரக்கொன்றை |
| முருங்கை | சங்கு | வெள்ளருகு |
| மிலைவேம்பு | எருக்கன்பழுப்பு | சுக்கு |
| திப்பிலி | பேரிச்சங்காய் | பஞ்சலவணம |
| பரிங்கிச்சக்கை | | |

இவைகளெல்லாம் வகைக்கு உ-பலமாக கொண்டிடி த்து காலிலொருபங்கு சக்கரைகலந்து அந்திசந்தி தி ருகடி சாப்பிடவும்.



---

கவிசைபெருவயறுதீர பேய்துமட்டி

எண்ணெய்

| | |
|---|---|
| பேய்துமட்டிக்காய் | வெள்ளைகாக்கணம்வேர் |
| மாவிலிங்கம்பட்டை | கொ[illegible]கொழுந்து |
| காயம் | க[illegible]ங்கம்வித்து |
| அவுரி | சின்னி [illegible] கொத்தான் |

கழற்பிவித்து மேலிப்பருத்தி வசம்பு
மஞ்சள் சிறுநெருஞ்சில் பிரண்டை
இவைகளெல்லாம் வகைக்கு அரிக்கால்பலம்
இந்துப்பு பொட்டிலுப்பு வெளையுப்பு
கறியுப்பு கல்லுப்பு வெங்காரம்
சவுக்காரம் சீனகாரம் படிகாரம் நவாச்சாரம்

இவைகளெல்லாம் வகைக்கு விராகனிடை-௨ இவை யாவும் பொடித்து சூரணித்து கஙு-பலம் விளக்கெண்ணெயில் கலந்து அடுப்பேற்றி கடுகுபதமாய்க்காய்ச்சி வடித்து பிரதிதினம் காலையில் துட்டிடை கொள்ளவும பத்தியம் வெள்ளாட்டு சூப்பு மான்கறி அரைக்கீரை சிறுகீரை துத்திக்கீரை கத்திரிப்பிஞ்சு முருங்கைப்பிஞ்சு அவரை துவரை நெய் பால் இவைகளாகும் ௫-நாள் எண்ணெசாப்பிட்டு அதற்கு சரிநாள்சென்று தலைமுழுகவும் நாற்பதுநாள்வரையிலும் இச்சாபத்தியமாகவிருப்பதுடன் புகை கடை ஸ்ரீபோகம் லாகிரி இவைகள் கூடாதென்றறிக,

---

## இரத்தமேகந்திர தாளிச்சசூரணம்

தாளிசப்பத்திரி ௬ கழஞ்சி திருகடுகு ௨ - கழஞ்சி
ஏலம் ௫ கழஞ்சி லவங்கம் ௫ - கழஞ்சி

இதுகளெல்லாம் கல்லுரலிட்டு யிடித்து வஸ்திரகாயஞ்செய்து கஉ-கழஞ்சி சக்கரைகூட்டி காலை மாலை சாப்பிட்டுவர மேற்படி வியாதிதீரும் இச்சாபத்தியமிருக்கவும்

கண்ணோய் கூடீ-க்கும் தலைமுழுக தயிலம்

பென்னாங்கண்ணி எலுமிச்சம்பழம் முத்தக்காசு
சீந்தில்தண்டு சிறுகீரை செண்பகப்பூ
நாகம் மதுரம் ஏலம்
கோஷ்டம் செங்கழுநீர்பூ தும்பைப்பூ

இதுகள் வகைக்கு க-பலம் சேகரித்துப்போட்டிடிக து வெண்மிளகு ரெண்டரைபலம் சூரணித்துப்போட்டு பத்துபலம் நல்லெண்ணெயிலிட்டுக்காய்ச்சி சீசாவிலடக்கி மார்க்கடைத்து குப்பைமேட்டில ௪௰-நாள புதைத்துவைத்தெடுத்து நாலுநாள் வட்டமாகமுழிகிவரில் கண்ணோய் யாவும் நீகுவதன்றி யெப்பொழுதும் அணுகாது,

---

கண்டமாலைக்கு மேற்பூசுந்தயிலம்

| | | |
|---|---|---|
| வேப்பெண்ணெய் | உள்ளி | வெம்பாடம்பட்டை |
| நறுகிரந்தி | கெந்தி | சூதம் |
| துருசு | துத்தம் | குங்கிலியம் |
| தாரம் | முதார்சிங்கு | |

இவைகள வகைக்கி க-விராகனிடை எடுத்து மேற்படி எண்ணெய்விட்டேயரைத்துகரைத்து சூரியபுடம் வைத்தெடுத்து கோழியிறகினால் தடவிக்கொண்டுவரவும் தீரும் அன்றியும் எலவிதசிரங்கிற்குந்தடவலாம்

---

சிலவிஷங்கட்கு குடிநீர்

| | | |
|---|---|---|
| தூதுவேளை | நாரத்தை | நொச்சியிலை |
| சின்னி | சிறுசின்னி | மலைநன்னாரி |
| பிரமி கழற்சி | கடுக்காய் | சுக்கு |

இவையெல்லாம் போட்டிடித்து கியாழமிட்டு இருவேளையும் மூனுநாளுண்ண சிலவிஷங்கள் தீரும் கடும்பத்தியம்.

கணைத்தெண்ணை,

| | |
|---|---|
| மருள்கிழங்கு | உள்ளி |

இவைகளையெல்லாம் வகைக்கு க-பலமாக எலுமிச்சமபழம் சார்விட்டரைத்து பின்னக்காயளவுக்கு உ-மூர

தெண்ணெவார்த்து காய்ச்சி கரண்டிவிதம் கொடுக்க வும் தேங்காய் மாங்காய் மாவினுல்செய்தபண்டங்கள் வாயவுமுதலானதாகாது,

கணத்திற்கு சூரியபுடயெண்ணெய்

மாஞ்சில் முத்தம் சிந்தில சிறுகாஞ்சொரி இவைகளெல்லாம் வகைக்கு ரெண்டரைபலம் சூர ணித்து சூரணத்திற்கு ஏழரைபலம் விளக்கெண்ணெ யில்கலந்து ௩-நாள் சூரியபுடம்வைத்து பிரகெடுத்து சிறுகரண்டிவிதம் ௫ நாள் கொடுக்கவும் பத்தியம்மே ற்கண்டபடி இச்சாபத்தியமிருக்கவும்,

கைகாலில் பித்தவெடிகண்டால்மருநது

மருதம்பிலேலை ஒருபிடிகொண்டுவந்து பசும்பால்வி ட்டரைத்து பின்னக்காயளவெடுத்து காலபடிபசும்பா லில் கரைத்து போசனம்செய்தபிறகு சாப்பிடவும் ௩-௫-நாள் சாப்பிட சுவஸ்தபபடும்,

நீரில இரத்தம்கண்டால் மருந்து,

பச்சரிசி விராலியிலே இரண்டும் சமன்கொண்டு எருமைப்பால்விட்டரைத்து பின்னக்காயளவெடுத்து தேற்ருன்வித்து சூரணம் கழற்சிக்காயளவு கலந்து பிசைந்து இருவேளையும் ௩-நாள்சாப்பிடவும்,

முழங்கால்வாதத்திற்கு கட்டடம்,

விழுதியிலே,எள்ளுபுண்ணாக்கு ஆவாரையிலே ச மன்கொண்டு கொஞ்சம் வெள்ளுள்ளிகலந்துயிடித்து விளக்கெண்ணெயில்வதைக்கி கட்டவும் இப்படி ௩-நாள பகலில் ஒருகட்டு ராவில் ஒருகட்டு கட்டவுந் தீரும,

### சனிகோழைக்கு பிரண்டைரசம்,

பிரண்டையை கொண்டுவந்து கும்பிசாம்பலில் வதக்கி சாறுபிழிந்து துட்டிடை சாறு உள்ளங்கையில்வார்த்து ஒருசெட்டிக்கை வெள்ளைசர்க்கரைபோட்டு சாப்பிடவும இப்படி இருவேளையும் ௩-நாளுண்ண தீரும்,

---

### பிள்ளைபெற்றவர்களுக்கு சீழுதிரம்கட்டிஞல் மருந்து,

வாழைமரத்தின் குருத்தை கொண்டுவந்து சுட்டு சாம்பலாக்கி பனைவெட்டு சமன்போட்டுபிசைந்து பாக்களவாக இருவேளையும்சாப்பிட ௩-௪-விசைவல முங்கழியும் வியாதியும்தீரும்,

---

### சுகஜன்னிக்குநெய்

முதலைநெய் அரைபலங்கொண்டுவந்து இரும்புக்கரண்டியிலிட்டு உருக்கி சுடுகையாகத்தானே உச்சியில்விட சுகஜன்னி பிதற்றல்பிணத்தல் விகாரம் இவை விட்டோடும்,

---

### குட்டிஞலகண்ட வெள்ளைக்குமருந்து

ஓனறேகால கழஞ்சியிடை வெண்காரத்தை செருப்பிலிட்டுபொரித்துக்கொண்டு பசும்வெண்ணெயில கலந்துண்ணவும் ௩-நாள் இருபோதும் சாப்பிட நீங்கும்,

---

### சிறுநீர்பிரங்க மறுந்து

மூடக்கொத்தான்யிலை ௧-பலம் வெள்ளைப்பூண்டு அரைபலம் இரண்டும்அரைத்து காலையிலசாப்பிடவும் இப்படி ௩-நாள் கொள்ள தாராளமாய் நீர்பிரங்கும,

மேகபுண்புரைகள் முதலான ரிணங்களுக்குத்தைலம், சங்கமவேர் ரு பலம பூவரசமபட்டை ரு பலம சிவனவேம்பு ரு பலம் வாலுளுவையரிசி ரு பலம் இவையெல்லாம கல் லுரலிலிட்டிடித்து தகுந்த நீர் விட்டு பிசைந்து குழித்தயிலமிரக்கி க-பலம் தயில த்திறகு க விராகனிடை முதார்சிங்கு யிழைத்து உள ளுக்குமகொடுத்து மேலுக்குமபூச சகல மேக புண்க ளும் ஆறும் யிச்சாபத்தியம்.

---

எச்சல்தழும்பு படர்தாமரைபடைகட்கு பூசுமருந்து, பூவரசமபட்டையை எலுமிச்சம்பழரசத்திலை அரைத்து தடவினால கொப்பளித்து விஷநீர்வடிந்து மாறிவிடும்.

தலைவலிக்கு சுருக்குதயிலம்,

எட்டிக்கொழுந்து இரண்டுபிடி மிளகு அரைப பலம் அத்துடன் தட்டிப்போட்டு நலலெண்ணை காலப டியில்கலந்து காயச்சிவைத்துக்கொண்டு ௪-நாள வ ட்டமாகமுழுகிவரில நெடுநாளாயுள்ள தலைவலி நா ளாவட்டத்தில சுவஸதமாகும தலைமுழுகும் தினத் தில பகலில நித்திரைசெயயாதிருககவும் இச்சாபத் தியம.

---

நாக்கிலும் உதட்டிலும் உண்டாகும் புண்களுக்கு குளிர்ச்சியெண்ணை

பசும்பால் அரைபடி சித்தாமணக்கெண்ணை அரைபடி இரண்டும்கலந்து அடுப்பிலேற்றி வெந்தியம்வெ ங்காயம மயிர்மாணிக்கமூலிகை வகைக்கு நாலுபலம் அரைத்துப்போட்டு காய்ச்சிவடித்துவைத்துக்கொண் டு காலையில கரண்டிவீதம் சாப்பிட்டுவர மூலச்சூடு த ணிந்து புண்கள் ஆறும்.

### மேகம் சகலபிணிசமன கபாலக்குத்து மேககாங்கை இவைகட்கு தைலம்

| | | | |
|---|---|---|---|
| காகதொட்டிசாறு | வ படி | முசுமுசுக்கைச்சாறு | வ , |
| கரியபான்பூண்டு | வ படி | நொச்சி | வ , |
| சிறுகாஞ்சொறி | வ படி | கருவூமத்தை | வ ,, |
| கஞ்சாயிலைசார் | வ படி | எருக்கம்பழுப்பு | வ ,, |
| இஞ்சிச்சாறு | வ படி | | |

நல்லெண்ணெய்காலேவீசம்வெள்ளாட்டுப்பால்காலேவீ

இவையெல்லாம் ஒன்றாய்கலந்து பத்துநாள் சூரியபுடமவைத்து பதினோராநாள் திருகடுகு கோஷ்டம் அக்கிராகாரம் கருஞ்சீரகம் ஓமம் குறுசாணியோமம் சாம்பிராணி பூலாங்கிழங்கு வகைக்கு விராகனிடை - க வெள்ளாட்டுபபாலிலரைத்து கலந்து காய்ச்சிவடித்து முழுகிவரில மேகம் உதரம் சகலபிணிசம் கபாலக்குடுகுததுசயம் மேககாங்கை இவைகள்நீங்கும் கட்டபுளி வருத்தவுப்பு கூட்டவும்,

---

### பிணிசததயிலம்,

கெஞ்சாயிலைச்சாறு அரைபடி நல்லெண்ணெய் அரைபடி இவையெல்லாம் ஒன்றாய்கலந்து அதனுடன் மிளகு ஒண்ணரைபலம் அரைத்துப்போட்டுகாய்ச்சிவடித்து முழுகிவர சகல பிணிசமுந்தீரும்.

---

### பித்தவெட்டை அஸ்திசுரம் கைகால்காந்தல் இவைகட்கு பசும்பலதைலம்,

| | | | |
|---|---|---|---|
| பசும்பால் | க-படி | நெல்லிச்சாறு | வ-படி |
| பொன்னாங்கணிசாறு | வ-படி | கத்தாழைமடல் | வ-படி |
| செவ்விளநீர் | வ-படி | சிறுகீரைச்சாறு | வ-படி |

நல்லெண்ணெய் ஒண்ணரைப்படி எல்லாமொன்றாய்கலந்து,

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மதுரம | உ | விராகனிடை | கோஷ்டம் | உ | விராகனிடை |
| ஏலம | உ | விராகனிடை | குரோசாணி | உ | விராகனிடை |
| பூலாங்கிழங்கு | உ | ,, | கஸ்தூரிமஞ்சள | உ | ,, |
| சடாமாஞ்சில | உ | ,, | சீரகம | உ | ,, |
| சாதிப்பத்திரி | உ | ,, | சாதிக்காய | உ | ,, |
| நறுபலாறி | உ | ,, | சோம்பு | உ | ,, |
| வாய்விளங்கு | உ | ,, | | | |

ஆவினபாலாலரட்டி எண்ணெயிறகலந்துகாய்ச்சி வடிதது மூழுகிவர அந்தி மாலே நேசதிரநோய் கூசு- பித்தவெட்டை பித்தவாய்வு உஸ்திவெட்டை உடமபெரிவு கைகால்காந்தல் உஷணரோய்தீருமஇச்சாபத்தியம்,

---

குழந்தைகட்குபேதி.

ஈருள்ளி இண்டங்கொழுந்து கடுக்காத்தோல் இவைகளை சிதைத்து எண்ணெயிற்போட்டெறிந்து பிற்குழந்தைகட்கு ஒருசங்குகொடுக்க நன்றாய்பேதியாகும் கிருமிகள்வீழும்,

---

நாக்குபபூச்சிகளவிழ

ஓமம் புரசைவித்து வேப்பீர்க்கு பிரண்டை இவைகளை சமவிடைகொண்டு வெள்ளாட்டுநீரில அரைத்து செய்து வடிகட்டி ஒருபாலடைகொடுக்க கிருமிகள பந்துபந்தாய்விழும்

---

பெரியோர்களுக்குமலக்கட்டுநீங்கசூரணம்,

கருவேப்பிலையும் வல்லாரியிலையும் சமமாயெடுத்து தேனில்குழைத்து இரவில போசனஞ்செய்தபிறகு சாப்பிட்டுவரவும் காலையில மலம் தாராளமாயுமாதயும நாளுக்குநாள வாய்வுநீங்கும்,

பிள்ளைகள் வாய்வு உப்பிசம மலக்கட்டு இவைகட்கு
பூபதிமாத்திரை

இரசம் க விராகனிடை சுக்கு க விராகனிடை
வெண்காரம் க-விராகனிடை கெந்தகம் க - விராகனி
நேர்வாளம் ௪-விராகனிடை

இவைகளை சுத்திசெய்து குளிர்ந்தநீர்விட்டு அரைத்து பாசிப்பருப்பளவாய மாத்திரைசெய்து ஒருமாத்திரையெடுத்து வெந்நீரிலுரைத்துகொடுக்க ஊது மாந்தம் பொருமல் வாதம் இவைகள் நீங்கும் பத்தியமில்லை.

அமிர்தசஞ்சீவிக்குழம்பு,

சாதிலிங்கம் க விராகனிடை வெண்காரம் க விராகனி
ஆமணக்கன்பருப்பு உ வாளம் ௪ விராகனி

இவைகளை சுத்தித்து அரைத்து குன்றிப்பிரமாணம் குளுந்த தண்ணீரில்கொடுக்க பேதியாகும் வெந்நீர் கொடுக்க பேதிகட்டும்.

இதுவும் பிள்ளைகட்கு செண்பகமாத்திரை,

செண்பகப்பூ க விராகனிடை ஏலம் க விராகனிடை
லவங்கம் க விராகனிடை திப்பிலி க விராகனிடை
சுத்தித்தவாளம் ரு விராகனிடை,

வெந்நீர்விட்டரைத்து கால்கழஞ்சுயிடை மாத்திரைசெய்து தேனிலாவது சுக்குகியாழத்திலாவதுகொடுக்கபேதியாகும்,

சாம்பல் மண்தின்னுகிர குழந்தைகட்குமருந்து,

கீழாநெல்லிவேர் க விராகனிடை கடுக்காதோல் உ விராகனிடை
மிளகு ௬ விராகனிடை

புளித்தமோரில் அரைத்துகலக்கி சங்களவு மூன்னுநாள்கொடுக்கதீரும் இரும்ப மண்முதலானவை தின்னாது,

கக் வாயுக்கு வேறுமருந்து,

மயிலிறகு சாம்பலும் மிளகுசாம்பலும சமனாயச் சேர்த்துப்பொடித்து ஆவின்நெய்யில் மத்தித்து கழற்சிக்காயளவு கொடுக்கத்தீரும்,

குழந்தைகளுக்கு விரைவாதமகண்டாலமருந்து

ஒருகோழிமுட்டை வெள்ளைக்கருவில ஒரு செச்சக்காயபருப்பு உடைத்துப்போட்டு ஒருவிராகனிடை சித்தாமுட்டிவேரையும அரைத்துப்போட்டு மூன்றுநாள்பொருத்து கொடுக்கத்தீரும்,

இதுவுமது விரைவாதமெண்ணெ.

சுக்கு எழுமிச்சங்காயளவு திப்பிலி எழுமிச்சங்காய
மிளகு எழுமிச்சங்காயளவு வசம்பு ,,
ஓமம் வெள்ளருகண்ணி ,,
செச்சக்காய்ப வேப்பங்கொழுந்து

இதுகளெல்லா மரைத்து ஒருபடி விளக்கெண்ணெயிலபோட்டு கரைத்து மெழுகுபதமாய்க்காய்ச்சி வடித்து சிறுகரண்டிவிதம் காலையிலகொடுத்துவரநீங்கும் ௩-எ-கக-நாள் கொடுக்கவும் வாய்வுபண்டங்கள் நீக்கி போசனமுறிக்கவும்,

பிள்ளைகள் பல்லில் இரத்தம்வடிதலுக்கு
மருந்து,

பச்சை நன்னாரிவேரைகொண்டுவந்து வென்னீர்விட்டரைத்து கொட்டைப்பாக்களவு கொடுக்கவும், ௩-நாளைக்கு மூன்றுவிசையாக காலை உச்சி மாலை இப்படி நிற்கிறவரையில கொடுக்கவும்,

பிள்ளைகள் காதில் யீபுகுந்தால் மருந்து

குப்பைமேனியிலையில சிறுநீர்விட்டு சதைத்து காதில்பிழிய யீசெத்து வெளியில்விழும்,

சகலமாச்சலுக்கும் பச்சைகற்பூரமாத்திரை,
பச்சைகற்பூரம் உ விராகனிடை லவங்கப்பட்டை உ வி
ஜாதிக்காய் உ விராகனிடை வாளம் ௪ வி
குமரிச்சாற்றிலரைத்து உளுந்து பிரமாணம் மாத்திரை செய்து சக்கரையில் ஒரு குளிகையிட ஒன்றிரண்டு
காலநாழிகையில் விரேசனமாகி காச்சலிறங்கும்,

## சணைச்சூடுதணிய எண்ணெய்

சித்தாமணக்கெண்ணெ அரைப்படி வல்லாரைச்சாறு அரைப்படி வெந்தயம்

ஆவின்பாலிலரைத்து கலக்கி பதமாய்க்காய்ச்சி வடித்து சக்கரைகலந்து கரண்டிவிதம் கொடுக்கவும் சணைச்சூடுதணியும்,

## சதைபடைப்புக்கு மருந்து

முற்றின கோழியின் குடலிலிருக்கும் சிறுகல்லும் வெள்ளரிப்பிஞ்சும் பூனை கரும்பெல்லும் வகைக்கு ஒரு கொட்டைப்பாக்களவு எடுத்தரைத்து ஆவின்பாலில் கலக்கிக்கொடுக்கத் தீரும் இப்படி ஆறுநாள் கொடுக்கவும்,

## பிள்ளைகள் சகலகழிச்சலுக்கும் உருண்டை

| | | |
|---|---|---|
| சாதிக்காய் | சாபத்திரி | லவங்கம் |
| ஏலம் | அதிமதுரம் | அதிவிடையம் |
| அபின் | கஞ்சா குரோசாணி | கோரைக்கிழங்கு |
| வெந்தயம் | சீரகம் சிறுநாகப்பு | புளியாரை |
| காட்டாத்திப்பூ | மாதளம்பிஞ்சு | வாழைப்பூ |

இவையெல்லாமிடித்து ஆவின்பாலில் பிட்டவியல் அவித்தெடுத்து வாழைப்பூச்சாற்றிலாவது மாதளம்பழச்சாற்றிலாவது அரைத்து மிளகுபோலுருண்டை

செய்து நிழலிலுலர்த்திவைத்துக்கொண்டு ஒரு மாத்திரையை பொடித்து சக்கரையில கலந்துகொடுக்கவும் இப்படி அந்திசந்திகொடுக்கநீங்கும்,

### பிள்ளைகள் மலககட்டுக்கு விரோசனப்பொடி,

இலைக்கள்ளிவேர்பட்டை ௫ பலம் மிளகு கவ பலம்
உள்ளி " கவ பலம் கடுக்காய் கவபலம்

இவைகளை இரவில் காயவைத்து உலர்த்தி யிடித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொண்டு குழந்தைகளபெலமறிந்து முலைப்பாலிலல்லது வெந்நீரில ஒரு காசெடைபோட்டு குலிக்கிவார்க்க விரோசனமாகும

### கண்புகைச்சல் காதுமந்தம் மண்டைகுடைச்சல் இவைக்குதைலம்,

வெட்டிவேர்தூள் ௰ பலம் ௪-படிஜலத்தில்போட்டு கியாழமிட்டு அரைப்படியாய்க்காய்ச்சியிரக்கி நல்லெண்ணெய் முக்கால்படி கூடவிட்டு அதிமதுரம்தேசாவாம் கடுக்காய் கஸ்தூரிவஞ்சள் வகைக்கு அரை பலம் இவைகளைப்பொடித்துப்போட்டு காய்ச்சிமுழுகிவர பீனிசம் மண்டைகுடைச்சல் நீர்கோவை கண்புகைச்சல் காதுமந்தம் தேகயெரிவு காந்தல் இவை தீரும் இச்சாபத்தியம்,

### சகலசுரத்திற்கும்மாத்திரை

ஆடுதின்னாப்பாளைவேரை நிழலிலுலர்த்தி கருவாய்ப்பட்டை சமன்கூட்டி பொடித்து வஸ்திரகாயஞ்செய்து எலுமிச்சம்பழ ரசத்தாலாட்டி பரித்துக்கொட்டைபிரமாணம் மாத்திரைசெய்து இஞ்சிசுரசம்தேன் இதுகளில் கொடுக்கநீங்கும்,

கணம் இருமல் வாய்நாற்றத்திற்கு கியாழம்,

மணத்தக்காளி ஒருபிடி வெந்தியம்ஒருபலம் சுரு ள்ளி மூன்று பலம் துடடிடை இவை பொன்னிறமா யவருத்து ஒருபடி தண்ணீர்விட்டுக்காய்ச்சி எட்டொ ன்றாய்க்காச்சிவடித்து மூன்றுவேளைகொடுக்கத்தீரும்

மண்டைபிணிசுக்குப்புகை

லிங்கம் விராகனிடை க அத்திப்பட்டை பலம் வ இவைரெண்டையும் நிழலுலர்த்தாக உலர்த்திப்பொ டிசெய்துவைத்துக்கொண்டு சுங்கானில் கொஞ்சம் போட்டு புளியன்பட்டையை கொளுத்தி அந்த நெ ருப்பை சுங்கானில்போட்டுபிடிக்கவும் இம்முறையா க ஐந்துநாள் பிடிக்க மண்டை பிணிசுதீரும்

கல்லடைப்பு மருந்து,

| | | | |
|---|---|---|---|
| மூள்ளிலவம் | க பலம் | நாவல்கொழுந்து | க பலம் |
| பூலா | க பலம் | வெட்பூலா | க பலம |
| முத்தக்காசு | க பலம் | நன்னாரி | க ,, |
| மூங்கில் | க பலம் | சீந்தில | க பலம |
| செந்தாமரை | க பலம் | சித்தாமுடடி | க பலம் |
| செங்கழுநீர் | க பலம் | சிறுகீரை | க பலம் |
| விராலி | க பலம் | வெட்டிவேர் | க பலம் |
| விலாமிச்சம்வேர் | க பலம் | பொன்னாங்கணி | க பலம |

நாலுபடி இளநீரில் போட்டு அரைபடி கியாழ மாய் வற்றக்காய்ச்சி வடிகட்டி கொடுக்கத்தீரும்,

சகலமேகயெண்ணெய்.

சித்தாமணக்கன்முத்தை ஒருநாள் யிளநீரில் ஊரவைத்து மறுநாள் அரிசி கழுவியதண்ணியில்வே கவைத்து உலர்த்தி ஆவாரைவேர் கியாழத்திலகரை

த்துக் காயச்சி பிழிந்த வெண்ணெயும் பெரும்பூசினிக் காய்சாறு தென்னம்பூசாறு வகைக்கு படி-க நன்றா ய்வொரு நீதுப்பலம் பெரித்நடி தது நாலுபடி தண்ணி யிறப்போட்டு கியாழமிட்டு அரைப்படி கியாழமாக யி ரங்கி மேற்படி மறுந்துடலாகலந்து காய்சசிவடித்து கட்டின ரசகற்பூரம் விராகனிடை அ கோரோசனை விராகனிடை-உ இரண்டும் கலவத்திலிட்டு மேற்படி வெண்ணெய்வாரதது உ-சாமம் அரைத்து கரைத்து கலகமிவைத்துக்கொண்டு தேகபலமறிநது கால் அல லது அரைவீசம்படி கொடுக்கவும் உப்பு புளிநீக்கிபத் தியம்வைக்கவும் மேகசூலை வெட்டை அஸ்திசூடுபிர மேகம் மேகச்சொரிசிரங்கு முதலானதும்தீரும்,

## சகலமேகத்திற்கும் வெண்ணெய்

விளக்கெண்ணெய் அரைபடி பெரும்பூசினிக்காய்ச் சாறு-க-படி ராவெங்காயச்சாறு அரைபடி எலுமிச் சம்பழச்சாறு அரைபடி தாமரைச்சாறு அரைபடி ஔருயக்கலந்துகொண்டு வெந்தியம் க-பலம் அரை த்து அதிலகலக்கு மெழுகுபதமாய்க்காய்ச்சிவடிதது மேலேயொன்றுக்கு காண்டிவிதம் சாப்பிட்டுவர சக லமேகமும் வைசூரிவெட்டை பிரமேகம் மூலக்கள அறுகாது நெடுநாளை நீர்கட்டு அக்கினிமந்தம்இவை தீரும,

## மேகவாய்வுக்கு வெள்ளிபஸ்பம்

செரக்கவெள்ளியாவது ரூபாவெள்ளியாவது க ழுரூபாயிடை யெடுத்து யிறுத வாழைபுரத்தடியில் சொரிவைத்து கடு-நாள்பொருத்துபோய் பார்த் தால சொரிவைத்த வெள்ளியின்மேல் முட்டைபு ட்டையாக கிளம்பியிருக்கும் அதைகொண்டுவந்து குப்பைமேனிசார்விட்டு அரைத்து வில்லைதட்டி செ

யபலில்வைத்துகாய்ந்தபிறகுமண் அகலேரெண்டுகொ ணடுவந்து ஒரு அகலிலபில்லேயைவைத்து மேலஒரு அகலேமூடி சீலேயில்மண்பூசி கவசம்செயது ம-கைவ ரட்டியில்புடம்போடவும் சுண்ணமாகும் அதை கல்வ ததிலிட்டு அரைததுவைத்துக்கொளளவும்

உள்ளுக்குசாப்பிடுமுறை

வேளையொன்றுக்கு அரிசியிடை பசுவெண ணையில குழைத்து காலே மாலே ரு-நாள்சாப்பிடவும

தீரும்வியாதிகள்,

அரையாப்பு கொருக்கு கைகால்பிடிப்புடன் உக மேகமுந்தீரும் பத்தியம இச்சாபத்தியம் எ-நாள வோமலஸநானம் சு-நாள் எள்ளெண்ணைஸ்தா னமசெய்யவேண்டும்,

ஜலஷ்டபேதிக்குகரியுப்பு,

கரியுப்பு கவ பலம் துத்திவோபட்டை எ-பலம் அதின்சமூலம் கூ பலம்

இவைகளைக்கொண்டுவந்து வேர்பட்டையும் இ லேயும் வெவ்வேறாக வுரளிலிட்டுஇடித்து பிரகு வெ ளாங்காய்பிரமாணம் மண்குடுவைகொண்டுவந்துஇடி தவேரையும் இலையையும்ஐநதுபாகமாக்கிஒருபாகம வேரில் பாதிகுடுவையில்போட்டு பிரகு உப்பை மத தியில்வைத்து அதின்மேலமற்றபாதிவேரையும்போ ட்டு அதின்மேல இலையையும்போட்டு குடுவைமேல ஒரு ஓட்டுபில்லேமூடி சீலேயில மண்கவசம்செய்து கோழிப்புடமபோடவும இப்படிஐநதுபுடமபோட்டு யெடுத்து கல்வத்திலிட்டு அரைததுபுட்டியில் போ ட்டுவைத்துக்கொள்ளவும,

சாப்பிடுகிறதற்கு ஒருவிராாணிடையெடுத்து அப் பட்டமானதேனில் குழைதது காலே மாலே ஐந்துநா ள்சாப்பிடவும்.

நீரும்வியாதி மேகவாய்வு ஊஷணவாய்வு கை கால் பிடிப்பு அஜீரணம்பித்தம்இவைமுதலான தும்தீரும்.

பத்தியம் நல்லெண்ணெ கடுகு கொள்ளுபருப்பு அவத்திக்கீரை பூசினிக்கா லாகிரி யிதுகள்கூடாவாம் பெரியோர்களுக்கு காணும் சகலமேகவெள்ளைக்கும்

லேகியம்.

கால்படி தேற்றான்வித்து கொண்டுவந்து நன்று யுறைக்குக்கழிவி பசும்பாலில் ௩-நாள்ஊரப்போட்டு யெடுத்தரைத்து அந்தனிறைக்கி சரியிடை பசுமவெண்ணைகூட்டி பிசைந்து ஆவின்நெய் அடுப்பிலேற்றி மேற்படி மருந்தைபோட்டு கிண்டிக்கொண்டேயிருக்கவும பொன்னிறமாய்வருமபொழுது சீரகம ஏலம வகைக்கு இரண்டரைவிராகனிடை

| | | |
|---|---|---|
| சாதிக்காய் | சிறுநாகப்பூ | லவங்கப்பட்டை |
| ஜாபத்திரி | தாளிசபத்திரி சதகுப்பி | குங்குமப்பூ |
| அதிமதுரம் | திருகடுகு | கிராம்பு கருஞ்சீரகம் |

வகைக்கு விராகனிடை-இ யாவும் யிடித்து வஸ்திரகாயஞ்செய்து அத்துடன் மூன்றுபலம் சீனியும் கலந்துகொண்டு அடுப்பிலிருக்கும் லேகியத்தில் சிறுக சிறுக தூவிக்கொண்டே கிளரிவருகையில் படிகாரத்தை பொரிகவைத்து பூர்த்தெடுத்த சுண்ணம் க-பலம்தூவி கிளரி யிரக்கிவைத்துக்கொண்டு நிதம் இருவேளையாக கொட்டைப்பாக்களவு கொடுத்துவரவும் ௨௰-நாள்கொள்ளவும் இச்சாபத்தியமா யிருக்கவும் நெய்-பால்-தயிர் சேர்ககலாம் சூடானபதார்த்தங்கள் யாவும் நீக்கி குளிர்ச்சியான மணக்கரி மாமிசமுதலானதும் ஆகும இம்மருந்து முடிவான கு-நாள்மட்டும் ஸ்ரீபோகம்நீக்கவும் எவ்விதவெள்ளையும்தீரும்

### வெள்ளைக்கு வெள்ளீயபஸ்பம்,

தங்காடியிலேகொண்டுவெந்து அரைத்து வெள்ளீயம் பலம்-௧ நிறுத்து அரைத்ததிலேயுள்வைத்து சீலை கவசம்செய்து ௫-வரட்டியால புடம்போடவும் சுண்ணமாகும்.

### உள்ளுருக்குச்சாப்பிடுமுறை,

வேளையொன்றுக்கு கடலைப்பிரமாணம் ஏழுநாள் காலைமாலைவெண்ணெயில்குழைத்துச்சாப்பிடவும்

### தீரும்வியாதிகள்

சகலவெள்ளையுந்தீரும் யிச்சாபத்தியம் ௬-நாள் ஒமஸ்தானஞ்செய்யவும் ௧௧-நாள் எள்ளெண்ணெயில் ஸ்தானஞ்செய்யவும்.

### மன்மதசிந்தாமணிலேகியம்

பசும்நெய்அரைபடி சீனிசர்க்கரை ௰-பலம்போட்டு அடுப்பேத்தி கரைத்து பாகுபதமாகையில்

| | | | | |
|---|---|---|---|---|
| திருகடுகு | ௧ | பலம்ஏலம் | ௧ | பலம் |
| எள்ளு | ௧ | ,,கிராம்பு | ௧ | |
| உளுந்து | ௧ | கோஷ்டம் | ௧ | ,, |
| வெந்தயம் | ௧ | இலவம்பிசின் | ௧ | |
| இலவன்வித்து | ௧ | குராசாணிவோமம் | ௧ | |
| மல்லி | ௧ | மதுரம் | ௧ | |
| கச்சோலம் | ௧ | ஜாதிக்காய் | ௧ | |
| இந்துப்பு | ௧ | சிறுதேக்கு | ௧ | |
| கடுக்காப்பூ | ௧ | நற்சீரகம் | ௧ | |
| கருஞ்சீரகம் | ௧ | ஓமம் | ௧ | |
| லவங்கப்பட்டை | ௧ | லவங்கப்பத்திரி | ௧ | |
| மதனப்பூ | ௧ | மூந்திரிப்பழம் | ௧ | |
| வசம்பு | ௧ | கடுக்காய் | ௧ | |
| நெல்லிவற்றல் | ௧ | தான்றிக்காய் | ௧ | |
| இலுப்பைப்பூ | ௧ | செங்கழுநீர்ப்பூ | ௧ | |

| | | | |
|---|---|---|---|
| அமுக்கிராக்கிழங்கு | ௧ | சீந்திற்றண்டு | ௧ |
| நெருஞ்சிலபழுப்பு | ௧ | நிலப்பனைக்கிழங்கு | ௧ |
| நீர்முள்ளிவிரை | ௧ | வாலுழ | ௧ |
| தண்ணீர்விட்டான்கிழங்கு | ௧ | ஆவாரை | ௧ |
| சத்திச்சாரணை | ௧ | சிறுகாஞ்சொறி | ௧ |
| அபின் பிராகணிடை | ௧ | | |

இவை ரவியிலுலர்த்தி இடித்து வஸ்திரகாயஞ் செய்து பசும்பாலில் பிட்டிட்டு உலர்த்திய சூரணத்தை மேற்படி நெய்பாகில துலிக்கொண்டேலரவும்கடைசியில தேன் ய-பலம்வெடுத்துகொஞ்சமாயவிட்டு கலக்கியபதாகுமட்டும் இளநிசிறக்கிலை நாக்கொண்டு வேளையொன்றுக்குக்கொட்டைப்பாகு பிரமாணமாக இருவேளையுமசாப்பிடவும்பத்தியமபாலுஞ்சாதமகொள்ளவும் தேகம்பலப்பதுடன் தாது விர்த்தியுண்டாம் உய-அலலதுசய-நாள் தின்றல் மிக நலலது.

மதனசஞ்சீவிநெய்

| | | | |
|---|---|---|---|
| திருகடுகு | ௪ களஞ்சி | சிறுநாகப்பூ | ௪ களஞ்சி |
| கிராம்பு | ௪ களஞ்சி | பத்திரி | ௪ |
| வாலமிளகு | ௪ | சிரகம | ௪ |
| தக்கோலம் | ௪ | | |
| கோரக்கர்மூலி | ௫ | அபினி | ௫ |

இவைகளை ஆவின்பாலி லரைத்து மூக்கர்ல்படி நெய்யிலவேகவைத்து நெய்யைவடிகட்டிக்கொண்டு ஒருகாண்டிநெய்சாப்பிடவும் புளியைத்தள்ளி பாலுசாதம்சாப்பிட்டுபுணர்ந்தால் இந்திரியம்கலிதமாகாது மிகவும் இன்பங்கொடுக்கும்,

பரமசிவன்பார்வதிக்குபதேசித்த

வயித்திய அரிச்சுவடி

சம்பூரணம்.



உ

கடவுள்துணை.

# அட்டவணை.

---

பக்கம் வயித்தியநாடிமுறை.



அவிழ்தமுறை

௪௧ இருமல்உப்பிஷகதிரபொடி
ஈளை இருமல்சுவாசத்திற்குகிருதம்
௪௨ பிள்ளைகட்குசுரத்திற்கும்குளிருக்குமருந்து
அசீரணத்திற்குகுழப்புரணங்களுக்குமொலாம்
தந்தவியாதிக்குப்பொடி
௪௩ மகோதரசர்க்திக்குசாறு ல் சீரநெய்
கிரந்திசூலைபுண்வயற்றுவலிவாய்வு பெரும்பாடுகே
௪௪ நீர்கழிச்சலுக்குகட்டுவாதி காதிரைச்சலுக்கு
பெரும்பாட்டுக்கு (தைலம்
௪௫ ஒடுகுன்மத்திற்குபொடிநீர்கடுப்பிற்குமருந்து
பிள்ளைபெற்றவர்களுக் வயற்றில்தங்கியஅழுக்
குநங்குமுளைகரப்பான்ரணங்களுக்குஎண்ணை
௪௬ வாய்வுகிரந்திரணத்தையெண்ணை
கரப்பான்ரணத்திற்கும்உள்ளுக்குமேலுக்கும்எ
பேதிக்கி எண்ணை குளிர்சியெண்ணை

௪௮ ராட்சதசூரணம்
வாதத்திலுல்வந்தகுத்தல்குடைச்சல்தீரசூரண
௪௯ சொரிசிரங்கிற்கும்சூலைக்கும்எண்ணை
அரையாப்புதீர எண்ணை பெருமூத்திரந்தீரபசு
மோர் பலவலிதீரக்கியாழம்
௫௰ பித்தம் சய் தீரதலைமுழுகும்தைலம்
பித்தத்திற்குசூரணம்மூலநோய்யாவுந்தீரசூரண
௫௧ கண்டதிற்குமேற்பட்டவியாதிக்கெல்லாம் சூ
வாதம் அய-சூரணம் ரணம்
கவிசைபெருவயறுதீர பேய்துமட-டியெண்ணை
௫௨ பிரத்தமேகந்திரதாளிசச்சூரணம்
கண்ணோய் ௯௬-க்குந் தலைமுழுகும்தைம்
௫௩ கண்டமாலைக்கு மேற்பூசுந்தைலம்
சிலவிஷங்கட்குகுடிநீர்கணக்கெண்ணை
௫௪ கணத்திற்குசூரியபுடஎண்ணை கைகாலில்பிக்த்

வெடிகண்டால்மருந்து நீரில்ரெத்தமகண்டால்
மருந்து மூழங்கால்வாதத்திற்குகட்டடம்
௫ரு சனி கோழைக்குபிரண்டைரசம்
பிள்ளைரொற்றவர்களுக்கு சிழுதிரம்கட்டிறால்ம
ருந்து சுகஜன்னிக்குநெய்
குட்டிறால்கண்டவெள்ளைக்குமருந்து
சிறுநீர்பிரம்கமருந்து
௫சு மேகபுண்புரைகள் முதலானரிணங்களுக்கு த
வெச்சலதளும்புதாமரைகட்குபூசுமருந்து
தலைவலிகருகு சுருக்குதைலம்
நாக்கிலும் உதட்டிலுமுண்டாகும் புண்களுக்கு
குளிற்பிரெண்ணை
௫எ மேகம் சகலபிணிசம்மேககாங்கைக்குதைலம்
பிணிசத்தைலம் பித்தவெட்டைஅஸ்திசுரம்கை
கால்காந்தல் யிவைகட்குபசும்பால்தைலம்
௫அ குழந்தைகட்கு பேதி நாகருபூச்சிகள்விழ
பெரியோர்களுக்கு வலக்கட்டுநீங்க குரணம
௫சு பிள்ளைகட்கு வாய்வு உப்பிஷம் மலக்கட்டுக்கு
பூபதிமாத்திரை அமிர்தசஞ்சீவிகுழம்பு
பிள்ளைகளுக்குசெண்பகமாத்திரை
சாம்பலமண்திண்ணுகிரகுழந்தைகட்கு மருந்து
சுய கக்குவானுக்குமருந்துகுழந்தைகட்குவிரைவா
தம்கண்டால்மருந்துவிரைவாதத்திற்குஎண்ணெ
பிள்ளைகள்பல்லீரத்தம்வடிதலுக்குமருந்து
பிள்ளைகள் காதில் ஈபுகுந்தால்மருந்து
சுக சகலகாச்சலுக்கும் கற்பூரமாத்திரை
கணைக்குதேணியெண்ணை சதையடைப்புக்கு
மருந்துபிள்ளைகள் சகலசுழிச்சலுக்கு உண்டை
சு௨ பிள்ளைகள் மலக்கட்டுக்குவிரோசனப்பொடி
கண்புகைச்சல்காதுமந்தம்மண்டைகுடைச்சல்
யிவைகட்கு தயிலம் சதலசுரத்திற்குமாத்திரை




இதைச்சேர்ந்த ௨-வது புத்தகமாகிய வயித்திய வரிக்குவாய்பாடத்தில் கைமுறையாய் செய்யத்தகுந்த பஸ்பம் செந்தூரம் கிருதம் முதலான அமிர்தங்களும் சில சரக்கு சுத்தியாகங்களும் சீக்கிரத்தில் வெளிவரும்.